# வெற்றிமுரசு பாடல்கள்

## (தமிழீழ எழுச்சிப் பாடல்கள்)




பாடல்கள்- புதுவை அன்பன் (நா. செல்வம்)

இசை - தமிழீழ இசைக்குழு

பாடியவர்: இரத்தினம்

### பல்லவி

வெற்றி முரசு இங்கு முழங்கட்டும்
வீரம் உருவெடுத்து ஆடட்டும்
பற்றிப் பகைவீடு எரியட்டும்
இளைய தலைமுறை எழுந்து வரட்டும்

### சரணம்

மானம் பெரிதென்று சொல்லுவோம் - சொந்த
மண்ணின் எல்லைவரை செல்லுவோம்
வந்த போரிதை வெல்லுவோம் - வரும்
சாவையும் கொல்லுவோம்

அச்சமில்லை அச்சமில்லை பகையினி மிச்சமில்லை
அண்ணனவன் உள்ளவரை அச்சமில்லை

(வெற்றி...)

மண்ணிலே பகையை விழுத்துவோம்
விண்ணிலும் ஏறிக் கொழுத்துவோம்
நெருப்பு நதியிலும் நீந்துவோம் - அண்ணன்
இருக்கும் போதேதுவக் கேந்துவோம்

அச்சமில்லை அச்சமில்லை பகையினி மிச்சமில்லை
அண்ணனவன் உள்ளவரை அச்சமில்லை

(வெற்றி ...)

நீதிக்கான இந்தப்போரடா - அதில்
நீயும் புகுந்துவிளை யாடடா
எதிரி உனக்கொரு தூசடா - அவனை
எடுத்து நெருப்பிலே வீசடா

அச்சமில்லை அச்சமில்லை பகையினி மிச்சமில்லை
அண்ணனவன் உள்ளவரை அச்சமில்லை

(வெற்றி ...)

பாடியவர்: தவபாலன்

புலியாட்டம் ஆடு
பூபாளம் பாடு
பொழுது விடியுதுபோர்
காவடி ஆடு.

(புலியாட்டம்)

பாட்டன் பூட்டன் ஆண்டு வந்த
எங்களது நாட்டை - அந்த
அப்பு காமி வந்திருந்து
ஆடுவதா வேட்டை
நெஞ்சிலே நெருப்பெடுத்து சன்னதம் ஆடு - அந்த
வஞ்சகரை போட்டு விடு சாம்பலோடு

(புலியாட்டம்)

கட்டிப்பிடிக்கின்ற தூரத்திலே - ஈழம்
கண்ணில் தெரியுதிந்த உலகத்திலே
எட்டி நின்று பாராதே ஓரத்திலே - தோளைத்
தட்டி நடைபோடு இந்த நேரத்திலே

(புலியாட்டம்)

எங்கள் தலைவனது காலத்திலே - வீரம்
பொங்கிப் பெருகுது பார் ஈழத்திலே
பிரபாகரன் பரம்பரை என்று சொல்லு - போரில்
வெற்றி பிறக்குமடா போய்க் களத்தில் வெல்லு

(புலியாட்டம்)

பாடியவர்கள்: இன்பநாயகி, தவமலர், தேவன், விஜயன்

பல்லவி

இடியும் மின்னலும் இரையும் கடலும்
புயலும் பூகம்பமானதம்மா
இரவில் விடியும் பொழுதின் வடிவில்
புதிய உதயம் ஆடுதம்மா
இது அக்கிரமத்தை அழிக்கின்ற யாகமம்மா - அது
ஆகும்வரை அடங்காத தாகமம்மா

(இடியும் மின்னலும் )

சரணம்

நஞ்சைக் கழுத்தினில் கட்டிய வேங்கை
பொங்கிப் புதுராகம் பாடுதம்மா
நெஞ்சில் நெருப்பினை மூட்டிய சத்தியம்
சன்னதம் கொண்டிங்கு ஆடுதம்மா

(இது அக்கிரமத்தை)

மூன்று நூற்றாண்டாய் முடங்கிக் கிடந்த வீரம்
மீண்டும் நெருப்பாய் மூண்டதம்மா
கும்பிட்டுக் குப்பிட்டு மண்டியிட்ட கைகள்
குண்டெறிந்து விளையாடுதம்மா

(இது அக்கிரமத்தை)

ஏழை அழுத கண்ணீரில் கருவாகி
பிறந்தது இந்தப் பிள்ளையம்மா
பச்சை ரத்தம் சிந்திச் செத்தாலும் இனி
பிச்சைக் கழுவதும் இல்லையம்மா

(இது அக்கிரமத்தை)

சத்திய வேள்வியில் நித்தம் குளித்திடும்
உத்தமர் சாவதும் இல்லையம்மா
வெற்றிக் கொடிதனை நாட்டும் வரை - உந்தன்
புத்திரன் ஓய்வதும் இல்லையம்மா

(இது அக்கிரமத்தை)

பாடியவர்கள்: இரத்தினம், நவம்

தமிழர் படை இது - தமிழ்
வீரத்தின் நடை இது
தலைவனின் கொடை இது - எங்கள்
தேசியப்படை இது

(தமிழர் படை)

கடற்புலி, கரும்புலி, தரைப்புலி, வான்புலி
எல்லைப்புலி எனவே எழுவோம்
கல்லு முள்ளெனினும் காடு மலை எனினும்
கடந்து மகிழ்வோடு நடப்போம்

(தமிழர் படை)

வானம் முழுதும் தமிழ் ஆளும் வகையில் - வீர
சிறகு விரித்தெழுந்து பறப்போம்
ஆழக்கடலடியில் நீலப்புலியாய் சுழி
ஓடிக் திரிந்துகுடி இருப்போம்

(தமிழர் படை)

கல்லறை வீரரின் கனவைச்சுமந்து - மன
உறுதிச் சபதம் ஒன்று எடுப்போம்
இறுதி மூச்சுடலில் இயங்க மறுக்கும் வரை
உறக்கம் மறந்தெழுந்து நடப்போம்

(தமிழர் படை)

சந்ததி வாழ்ந்திட சமத்துவம் நிலைத்திட
சுதந்திர தாயகம் அமைப்போம்
எந்தப் படைவரினும் ஏது தடைவரினும்
வெந்து வெடியாகி வெல்வோம்

(தமிழர் படை)

பாடியவர்: தவமலர்

கல்லறைத் தொட்டிலிலே
கண்ணுறங்கும் கண்மணிகள்
காவியத்தின் மடியினிலே
கண்மூடித் தூங்குகிறார்
ஆராரோ ........ ஆரிவரோ
ஆர்வயிற்றில் பிறந்தாரோ

ஊருறங்கும் வேளையிலும் - நாய்
ஊளையிடும் சாமத்திலும்
கொட்டும்மழை மாரியிலும்
கொடும்பனி காலத்திலும்
கண்விழித்து காத்திருந்த
கண்மணிகள் மூடியதோ
எங்களுக்காய் பூத்திருந்த
பூ விழுந்து வாடியதோ

(ஆராரோ...)

உன்ஊரை நானறியேன்
உற்றவரை நானறியேன்
பெற்றவரின் முகமறியேன்
பேதை என்ன சொல்லி அழுவேன்
தலைவனின் நெஞ்சுக்குள்ளே
நின்றெரியும் நெருப்புகளே
தாயகத்தை வென்றுதருவோம்
நிம்மதியாய் தூங்குங்களே

(ஆராரோ...)

பாடியவர்கள்: இன்பநாயகி, கந்தையா

புதிய பாடம் படிக்க வா
வா வா வா வா
புது - விதியின் கதைதனை எழுத வா -
வா வா வா வா
புரட்சிப் படியில் ஏறி வா
வா வா வா வா
புது - மனிதனா மாறி வா
(புதிய பாடம் படிக்க...)

தேசம் விடிகின்ற நேரத்திலே - ஒன்று
கூடியே போரிலே குதிப்போம்
வாசல் தேடிவந்த யுத்தப் பகைவனை
முற்றத்திலே வைத்துப் புதைப்போம்
வெற்றித் தலைவனின் காலத்திலே
விடுதலையைக் கையிலே எடுப்போம் - இங்கு
ஏற்றத்தாழ்வில்லாமல் எல்லோரும் வாழ்ந்திட
இனியராகம் படிப்போம்
(புதிய பாடம் படிக்க )

ஆண்டானடிமை (யெ) என்றிடும் நிலைதனை
பூண்டோடொழித்திங்கு மாற்றுவோம்
ஆணும் பெண்ணும் சரிநிகர் என்று புது
சாத்திரத்தைப் பறை சாற்றுவோம்
நீண்ட நெடுங்காலம் தொடரும் மடைமைக்
கருத்தினைக்களை எடுப்போம் - ஒரு
சாதி சமயப் பேதங்களில்லாத
சமூக நீதி படைப்போம்
(புதிய பாடம் படிக்க...)

அண்ணனின் நெஞ்சிலே தோன்றிய எண்ணத்தை
எங்களின் நெஞ்சிலும் ஏந்துவோம்
அன்னை கழுத்திலே அன்னியர் பூட்டிய
அடிமை விலங்கை அறுப்போம்
எங்கள் நிலத்திலே வந்த பகையை
நெருப்பை மூட்டி எரிப்போம்
அந்தச்சாம்பலிலே ஒரு சமதர்மக் கொடி
ஆடுவது கண்டு சிரிப்போம்
(புதிய பாடம் படிக்க )

பாடியவர்: புதுவை அன்பன் (செல்வம்)

எத்தனை காலம் தூங்கிக் கிடப்பாய் வீட்டிலே - தம்பி
தலை குனிஞ்சு ஏன் நடக்கிறாய் ரோட்டிலே - இன்னும்
எத்தனை

உந்தன் நெஞ்சிலிருக்குது மானம் - அட
தோளிருக்குது வீரம் - நீயும்
துணிந்தெழுந்தால் தொலைந்திடுவான்
வந்த படை அந்த நேரம்
செங்களம் ஆடுது வேங்கை - தம்பி
ஊதடா வெற்றியின் சங்கை
போரும் நடக்குது காலம் கிடக்குது
உன் மனச்சாட்சி எங்கை - இன்னும்

(எத்தனை )

கண்ணைத் திறந்து பாரடா - உந்தன்
மண்ணின் கதையைக் கேளடா
தாயின் கழுத்தையெதிரி கடிக்கிறான்
பாய் விரித்து நீயும் என்ன படிக்கிறாய்
காலம் உனைப்பழி சொல்லுமடா - தெருக்
கல்லும் உன்னைக் கேலி செய்யுமடா
புல்லுத்தின்னத்தான் பிறந்தாய் என்று
வரலாறு காறித் துப்புமடா - இன்னும்

(எத்தனை )

உனக்கும் இருக்கு ரோசம் - இந்த
மண்ணிலும் இருக்குப் பாசம்
இத்தனை கால நித்திரையாய் நீ
படுத்திருந்தது போதும்
பொங்கி எழுந்து நீ காட்டு - வீர
வேங்கை என்று நிலை நாட்டு
பூனை அல்ல நீ புலி தான் என்று
புதிய பாட்டுப்பாடு - இன்னும்

(எத்தனை...)

பாடியவர்கள்: தவமலர், தயாளன்

காலத்தை உணர்ந்தவள் தோளைக் கொடுக்கிறாள்
கடமையின் வழியிலே நிமிர்ந்து நடக்கிறாள்
வெற்றிக்கனி பறிக்கும் வேளை - அதைப்
பற்றிப் பகிர்ந்துண்ணப் பறந்து வா... வா...

அறுவடைக்காலம் இது
அறுவடைக்காலம்..
வறுமையும் சிறுமையும்
அகன்றிடும் காலம்
அறுவடைக்காலம்.

(காலத்தை)

உயிரை விதையாக்கி உடலை எருவாக்கி
குருதி நீராக்கி இறைத்தோம்
இரவு பகல் என்றும் இளமைக் கனவென்றும்
எதுவும் பாராமல் உழைத்தோம் - அந்த
உழைப்பின் பெருமைக்கொரு உயர்வைத்தரும் பொழுது
விடியும் காலம்தான் அறுவடைக்காலம்...
இது அறுவடைக்காலம்

உழைத்தவர் உரிமைகள்
சிரித்திடும் காலம்
அறுவடைக்காலம் - இது
அறுவடைக்காலம்...

(காலத்தை)

பசியில் கிடந்து உடல் உருகி நடந்து துயர்
கடலில் மிதந்துமே அலைந்தோம்
ஊரும் உறவிழந்து உறங்கும் மடியிழந்து
முகவரியும் இழந்து தொலைத்தோம். இன்று
உலகம் முழுதும் எங்கள் பெயரும், பெருமைகளும்
உலவும் காலம் தான் அறுவடைக்காலம் - இது
அறுவடைக்காலம்...

(காலத்தை)

பாடியவர்: குட்டிக்கண்ணன்

டப்பாங் கூத்து பாட்டுத்தான்
காதில கொஞ்சம் போட்டுப்பார் - இது ...டப்பாங்

குட்டிக் கண்ணன் ரோட்டிலே
வந்து நின்று பாட்டிலே
நாட்டுக்காக செய்தி ஒன்று
சொல்லுகிறேன் தெருக் கூத்திலே
தககிமி தகதின்னாத்தரிகிட

(டப்பாங்கூத்து)

நாடும் வீடும் எங்களுக்கு
ரெண்டும் கண்ணு தானே - நாங்கள்
சொந்தம் என்று சொல்ல இந்த
மண்ணும் ஒன்று தானே
மானத்துக்கு பேர் எடுத்த
நாங்கள் கவரி மானே
இது புரிஞ்சா நெஞ்சு துணிஞ்சா
புலி நடையைப் போடு...

தக இன்னாத் தரிகிட (டப்பாங்கூத்து...)

அக்கா என்ன வெட்கத்திலே
தரையைப் பார்க்குறீங்க
அண்ணே என்ன வளைஞ்சு நெளிஞ்சு
தலையை சொறியுறீங்க
காலம் உங்களை நம்பித்தானே
காத்திருக்குதிங்க
இது புரிஞ்சா - நெஞ்சு துணிஞ்சா
புலி நடையைப் போடு..

தக இன்னாத் தரிகிட (டப்பாங்கூத்து..)

நாங்கள் வாழ வேண்டும் என்றால்
நாடு மீள வேண்டும் - எங்க
நாடு மீள வேண்டும் என்றால்
வேங்கை ஆக வேண்டும்
அண்ணன் பேரைச் சொல்லிப்பாரு
உன்னில் வீரம் ஏறும்
இது புரிஞ்சா நெஞ்சு துணிஞ்சா
புலி நடையைப் போடு

தக இன்னாத் தரிகிட (டப்பாங்கூத்து...)

பாடியவர்: பிரதீபன்

வா வா பாதை இது தான் - வாழ்வின்
வாசல் தெரியுதிங்கு வா வா
மரணம் வரினும் சரிதம் - உனது
வாழ்வில் கதையைச் சொல்லும்

(வா வா...)

எதிரி குடியிருக்கும் குகையும் எரிகிறது
எரியும் தணலில் தமிழ் ஈழம் முளைக்கிறது
அன்னை பூமி இங்கு உன்னை அழைக்கிறது
அண்ணன் மடியில் வந்து வென்று குடியேற

புதிய பிறப்பெடுத்து வா... ... வரிப்
புலியாய் வடிவெடுத்து வா

(வா வா..)

வரிப்புலி வீரரின் வரிசையைப் பாரு
எரிமலை என நீ அணியுடன் சேரு
உரிமைப் போர் உனது உயிரெனக் கூறு
உனது உறவெரியும் சிதையின் நெருப்பெடுத்து

கொல்பவனைக் கொல்லடா... ... உன்
வாழ்வுதனை வெல்லடா...

(வா வா..)

புதிய பிறப்பெடுத்து வா... ... வரிப்
புலியாய் வடிவெடுத்து வா

(வா வா..)

பாடியவர்: புதுவை அன்பன் (செல்வம்)

அழுதது போதும்
குழு. ஆ .............. .......

தொழுதது போதும்
குழு. ஆ .......................

நாளும் பொழுதும் புழுவாக நெழிந்தது
போதும் போதும் இனி எழு எழு மனிதா

குழு. கண்ணில் புரட்சி எரியட்டும்
மண்ணில் எங்கும் பரவட்டும்
பெண்ணின் கரமும் உயரட்டும்
மனித விடுதலை தோன்றட்டும்

ஏரை இழுக்கும் உந்தன் எருமை - அட
அதற்கும் உனக்கும் தான் சம உரிமை
இதுதானா உந்தன் பெருமை - இதைத்
தெரிந்துமா உனக்குப் பொறுமை

(கண்ணில் புரட்சி)

உழைத்து உடலை நீ உருக்கிறாய் - கஞ்சி
துளியும் இன்றி வயிற்றை சுருக்கிறாய்
இறந்து இறந்து தினம் பிறக்கிறாய் - இதை
தெரிந்துமா உறங்கிக் கிடக்கிறாய்

(கண்ணில் புரட்சி)

வாழத்துடிக்கின்ற ஏழையே - நீ
நம்பியிரு ஈழம் நாளையே
பூனை படுத்துறங்கும் அடுப்பினில்
சோற்றுப்பானை ஏற்றுவான் பிள்ளை - பிர
பாகரனே அந்தப்பிள்ளை

(கண்ணில் புரட்சி)

# வெற்றி முரசு பாடல் ஒலிப்பதிவுப் பேழை இது

விடுதலைப் புலிகள் கொள்கை முன்னெடுப்புப்பிரிவினரின் போர்ப் பறையைத் தொடர்ந்து. புதுவை அன்பன் செல்வத்தின் புரட்சி வரிகளில் ஒலிக்கிறது இந்த வெற்றி முரசு. எங்கள் தலைவனின் நெஞ்சுக்குள் இருக்கும் எமது மக்களுக்கான இனிய வாழ்வை எல்லோரும் எடுத்து உண்டு மகிழும் காலம் அண்மித்து வருகிறது. இன விடுதலைக்கும், மண் விடுதலைக்கும் எமது தேசிய விடுதலைக்கும் அப்பாலும், மேன்மையான மனித விடுதலையை நோக்கி விரிந்து எங்கள் தலைவனின் வீர சுதந்திரப் போராட்டப் பாதையிலே மிதி வண்டிகளின் மீதேறி தெருப் புழுதிகளில் புரண்டு, வீதி ஓர மரத்தடிகளில் இடந்து தமது வியர்வைத் துளிகளால் விடுதலையின் வேருக்கு நீர் பாய்ச்சி வரும் தெருவெளி நாடகக் கலைஞர்களின் நீண்ட நெடுங்காலக் கனவுகள், இந்த ஒலிப் பேழை ஊடாக உயிர் பெறுவது கண்டுள்ளம் பூரிக்கின்றது

இந்தக் கலைஞர்களது அர்ப்பணிப்புக்களை ஆவணமாக்கி அவர்களது ஆற்றலை வெளிக்கொணரும் எங்கள் அயராத முயற்சியை பெருவிருப்போடு அரவணைத்து இனிய இசையால் உயிர் வடிவம் கொடுத்த தமிழீழ இசைக் குழுவின் அமைப்பாளர் ஈஸ்வரநாதன் அவர்களுக்கும், அவருக்கு உறுதுணையாய் நின்று உழைத்த அத்தனை கலைஞர்களுக்கும் இந்தப் பாடல்களை காலப் பதிவாக்கிய தர்மேந்திரா கலையகத்துக்கும் என்றும் மறவாத எங்கள் இதயத்தின் நன்றிகள்.

தமிழீழ தேசம் பூரித்தும் போருக்காக ஆர்ப்பரித்தும் நிற்கும் வேளையிது. வீரத்தின் சிறகு விரிந்தெழுந்து தமிழன் உயரப் பறக்கும் நேரமிது. அடி வானத்தின் அருகில் வந்து விடியலை எட்டிப் பிடிக்கும் நாட்களை விரல்விட்டு எண்ணிக் கொண்டிருக்கும் காலமிது.



இந்தக் காலத்தின் தேவையைச் சுமந்து வரும் இந்த எழுச்சிக் கானங்களை எங்கள் தேசத்தின் உறவுகளின் இதயங்களில் விதைக்கின்றோம். நெஞ்சில் நெருப்பாய் எழுந்த இந்தப் புரட்சி வரிகள் எங்கள் இளைய தலைமுறையின் உள்ளத்தில் மூளட்டும். புதியதோர் மனிதம் இங்கு வாழட்டும்

வாருங்கள்! எல்லோரும் வாருங்கள்!
கண்ணைத் திறந்து உலகம் அண்ணாந்து பார்க்க
வானத்தில் ஏறி வண்ண நிலவைப் பிடித்து
முரசு கட்டுவோம் விடிந்தது எங்கள் தேசம் என்று
வீரத் தோள்களைத் தட்டுவோம்.

வெற்றி முரசு இங்கு முழங்கட்டும்
வீரம் உருவெடுத்து ஆடட்டும்
பற்றிப் பகைவீடு எரியட்டும்
இளைய தலைமுறை எழுந்து வரட்டும்.

"புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்"



''நாம் எமது படைபலத்தை பெருக்கிப் போராட்டத்தை தீவிரமாக்க வேண்டும். தமிழ் மக்கள் தமது அரசியற்தலை விதியை தாமேநிர்ணயிப்பதாயின் தமிழரின் படைபலம் பெருகவேண்டும். எமது படையமைப்பை பலப்படுத்திக்கொள்வதன் மூலமே நாம் பாதுகாப்பாக வாழமுடியும்; நாம் எமது இழந்த மண்ணை மீட் டெடுக்க முடியும். எமது சொந்த இடங்களுக்கு சுதந்திர மனிதர் களாக திரும்பிச் செல்லமுடியும். போராடித்தான்வாழ வேண்டும் என்ற நிர்ப்பந்தத்திற்கு தமிழ்த்தேசம் தள்ளப்பட்டிருக்கிறது. இந் தத் தேசியப் பணியிலிருந்தும் - வரலாற்றின் அழைப்பிலிருந்தும் தமிழ் இளைஞர்களுக்கும் இளம் பெண்களுக்கும் நான் வேண்டு கோள் விடுக்கின்றேன்''

தமிழீழத் தேசியத் தலைவர்